Licensed to Post Without Pre-Payment Licence No 6T N .                Progressive Tamil Daily to the People

# நெடுஞ்செழியன் கோஷ்டி-

Regd No. TN MS [C] 244 Phone 420212 4 பக்கம் விலை 70 காசு

# மோசடியானது

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 12 சென்னை ஞாயிறு 3-1-88 வெளியூர் 4-1-88 திங்கள் இதழ் 78

## சென்னை மாவட்ட கழகம் தீர்மானம்

## 'ஜெயலலிதாவுடன் எத்தொடர்பும் வைக்காதீர்' என்ற இதய தெய்வம் புரட்சித்தலைவரின் இறுதி கட்டளையை செயல்படுத்துவோம்

சென்னை, ஜன. 3- நாவலர் தலைமையிலான கோஷ்டி மோசடியானது என்று சென்னை மாவட்ட கழகம் தீர்மானம் நிறைவேற்றியது ஜெயலலிதாவுடன் எந்த தொடர்பும் வைத்து கொள்ளாதீர்கள் என்று இதய தெய்வம் புரட்சித்தலைவர் பிறப்பித்த கட்டளையை செயல்படுத்துவோம் என்று சென்னை மாவட்டக் கழகம் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது என்று ஜேப்பியார் அறிவித்தார்.

மாவட்ட கழகசெயலாளர் ஜேப்பியார் நிருபாகளிடம் கூறியதாவது:-

சென்னை மாவட்ட கழக நிர்வாகிகள்கூட்டம்மாவட்ட கழக அவைத்தலைவர் ப. அங்கமுத்து தலைமையில் நடந்தது.

அதில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:-

இதய தெய்வம் புரட்சித் தலைவர் மறைவையொட்டி இக்கூட்டம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

எங்களையும் சேர்த்து லட்சக் கணக்கான தொண்டர்களையும் சேர்த்து எங்கள் ஆழ்ந்த இரங்கலை அன்னை ஜானகி அம்மையாருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அன்னை ஜானகி அம்மையாரை சட்டமன்றக் கட்சித் தலைவராக தேர்ந்தெடுத்த சட்டமன்ற கழக உறுப்பினர்களுக்கு எங்கள் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. க, ழ க மூத்த துணைப் பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தமும் மற்ற தலைமை நிலைய நிர்வாகிகளும் அடங்கிய அனைத்திந்திய அண்ணா தி மு கழக அமைப்பைத் தவிர வேறு அமைப்பை ஏற்கவோ நடத்தவோ உரிமை இல்லை அப்படி அமைப்பு வைத்திருந்தால் அவர்கள் மோசடியான காரியம்செய்கிறார்கள்என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

இதயதெய்வம் புரட்சித் தலைவர் விட்டுச்சென்ற அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக சட்டமன்றக்கட்சி தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட அன்னை ஜானகி அம்மையாரைத்தான் முழுமனதாக ஏற்றுக் கொண்டு பணியாற்ற சபதம் ஏற்கிறோம்.

இதய தெய்வம் புரட்சித் தலைவரின் கடைசிகட்டளையானசட்ட மன்ற உறுப்பினர்களோ நாடாளுமன்ற உறுப்பினர்களோ நிர்வாகிகளோ ஜெயலலிதாவுடன் எந்ததொடர்பையும் வைத்து கொள்ளக் கூடாது என்று சொல்லியிருக்கிறார் ஜெயலலிதா பெயரில் மன்றங்களோ படம் போட்ட சுவரொட்டிகளோ போடக் கூடாதுஎன்று இதயதெய்வம் புரட்சிதலைவர் கட்டளையிட்டுள்ளார் இதயதெய்வத்தின் கட்டளையை ஜெயலலிதா சொல்லும் எந்த செயலையும் செய்வதில்லை என்று முடிவு செய்துள்ளோம்.

மாவட்ட செயலாளர் ஜேப்பியார் இத்தகவலை அறிவித்தார்.

குக செல்வம் சைதை ஏற்றுதுரைசாமி எம்.கே.பாலன் தி.நகர் மூர்த்தி, வ கோதண்டராமன், குமார் மணி சோமசுந்தரம் ஏ. மோகனசுந்தரம் ஜெயபால், எம். வி ராமன், மு. அன்புத்தம்பி, நீலகண்டன், ராஜ்குமார், டி, கே, கபாலி மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

## ''நீங்களே தமிழக முதல்வர்''

# 97 எம். எல்.ஏக்களும் அன்னையுடன் சந்திப்பு

### மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம்

சென்னை, ஜன, 3- கழக எம்.எல்.ஏக்கள் 97 பேர்களும் நேற்று மாலை அன்னை ஜானகி அம்மையாரை சந்தித்தனர்.

அப்போது அங்கு கூடி இருந்த ஆயிரக்கணக்கான மக்கள் புரட்சித்தலைவர் புகழ் வாழ்க. முதல்வர் ஜானகிஅம்மையார் வாழ்க. என்று வாழ்த்து முழக்கமிட்டனர்.

கழக எம்.எல்-ஏக்கள் 97பேர்கள்நேற்று ஆளுநர் குரானாவை சந்தித்தனர்

ஒவ்வொருவரையும் ஆளுநர் குரானா தனித்தனியாக விசாரித்து பூரண திருப்தி அடைந்தார்.

ஆளுநர் மாளிகையில் இருந்து எம். எல். ஏக்கள் அனைவரும் நேராக தோட்டத்திற்குச் சென்றனர்,

அதற்குமுன்பு தோட்டத்தில்ஆயிரக்கணக்கானமக்கள் கூடிஇருந்தனர்.

எம்.எல்.ஏக்கள்தோட்டத்திற்குவந்த போது வாழ்த்து முழக்கமிட்டனர்.

அமைச்சர்களும், எம்.எல். ஏக்களும் அன்னை ஜானகி அம்மையாரை சந்தித்து தங்கள் ஆதரவை உறுதிப்படுத்தினர்.



தோட்டத்தில் கூடி இருந்த கூட்டம் முழக்கமிட்ட வண்ணம் இருந்தது.

அந்த மக்களை சந்திக்க அன்னையார் மாடியில் இருந்து இறங்கி கீழே வந்தார்.

அன்னையின் முகத்தைப் பார்த்த மக்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கை தட்டினர்.

அன்னையார் அவர்களைப் பார்த்து கரம் குவித்து வணக்கம் செய்தார்,

புரட்சித்தலைவர் புகழ் வாழ்க.

அன்னை ஜானகி அம்மையார் வாழ்க. முதல்வர் ஜானகித்தாய் வாழ்க

காப்போம் காப்போம் புரட்சித்தலைவரது ஆட்சியை காப்போம்

காப்போம் காப்போம் புரட்சிதலைவரது கட்சியைக் காப்போம்என முழக்கமிட்டனர்.

இதன்பிறகு அமைச்சர்களும், எம் எல் ஏக்களும் அன்னையை சந்தித்துப் பேசினார்கள்.

## புதுவையில் இதய தெய்வத்துக்கு சிலை

பாண்டிச்சேரி, ஜன. 3- புதுவையில் 1 லட்ச ரூபாய் செலவில் இதயதெய்வம் முழு உருவச்சிலையை அமைக்க புதுவை கழகம் முடிவு செய்துள்ளது. புதுவை மாநில கழக அமைப்பாளர் பி கே லோகநாதன்தலைமையில் நடந்த கூட்டத்தில் மேற்கண்ட முடிவுஎடுக்கப்பட்டது கூட்டத்தில் இதய தெய்வம் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## பாரதிய ஜனதா அஞ்சலி

கொச்சி, ஜன. 3- பாரதிய ஜனதா கட்சியின் செயற்குழு கூட்டம் நேற்று கொச்சியில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் நம் இதய தெய்வம் மறைவுக்குஇரங்கல் தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## பொது பணித்துறை அலுவலர்கள்

அமரா புரட்சித் தலைவருக்கு அஞ்சலி தெரிவிக்கும் வகையில் தமிழ்நாடு அரசு பொதுப்பணித்துறை பணிமனை பண்டகசாலை தலைவர் எஸ். சண்முகசுந்தரம் துணைதலைவர்கள் கே. எஸ், ஆறுமுகம் ஜி. அப்துல்கபூர் செயலாளர் சி.எஸ்.பாண்டுரங்கன் பொருளாளர் கே.மோகன் ஆகியோரும்அஞ்சலிசெலுத்தினர் அண்ணா தொழிற்சங்கத்தினர் இரங்கல் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றினர்.

பொதுச் செயலாளர் நாமதேவன் தலைமையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## ஜெயலலிதாவுக்கு கல்தா: புரட்சித்தலைவர் இறுதியாக எடுத்த நடவடிக்கை விவரம்

### காளிமுத்து தகவல்

சென்னை, ஜன. 3- முதல்வர்புரட்சித்தலைவர் இறுதியாகக் கையெழுத்திட்ட பைலில் ஜெயலலிதாவை தணிக்கை குழுவிலிருந்து நீக்கி உத்தரவிட்டுள்ளார் என்று கழக துணைப் பொதுச்செயலாளர் காளிமுத்து கூறினார்.

கழக துணைப் பொதுச் செயலாளர் காளிமுத்து நிருபர்களிளம் கூறியதாவது.

ஜெயலலிதாவிடம் தொடர்பு கொள்ள வேண்டாமென்று சட்டமன்ற உறுப்பினர்கள் நாடாளுமன்றஉறுப்பினர்கள் கழக முன்னணியினருக்கு அமரர் புரட்சித்தலைவா ஆணையிட்டிருந்தார் கடந்த டிசம்பர் 22ந்தேதி கடைசியாக பார்த்து கையெழுத்திட்ட ஒரு பைலில் சென்சார் போர்டில் உறுப்பினராக இருந்த ஜெயலலிதாவை நீக்கம் செய்து அதில் எழுதி இருந்தார் அதேபோல் கட்சிப் பணியில் இருந்து ஜெயலலிதாவை படிப்படையாக நீக்குவதற்கான ஏற்பாடுகளை புரட்சித் தலைவர் செய்து வந்தார்.

புரட்சித்தலைவர் உடல் நலிவுறக் காரணமாக இருந்தவரே ஜெயலலிதாதான் அவர் கொடுத்து வந்த தொல்லைகள், சித்திரவதைகள் தான் ஏராளம்.

புரட்சித்தலைவரின் மறைவுக்கு காரணமேஜெயலலிதா தான் கட்சியின் செயற்குழு பொதுக்குழு ஆகியவற்றை கூட்டும் அதிகாரம் அவர்களுக்கு இல்லை. செயற்குழு பொதுக் குழுவைக் கூட்ட கட்சி விதிகளின் படி ஒரு சில விதிகளை வைத்து அதன் படி தான் புரட்சித்தலைவா செயற்குழு பொதுக் குழுவை கூட்டினார் அவர்களுக்குகட்சியின் செயற்குழு பொதுக் குழு உறுப்பினர்கள் யார் என்ற விபரமே தெரியாது.

நேற்றைய தினம் கட்சி பொதுக்குழு செயற்குழு உறுப்பினர்கள் பட்டியலை அவர்கள் கேட்டாகள் அதை நாங்கள் தர மறுத்து விட்டோம்.

நேற்றைய தினம் பத்திரிகையாளர்களுக்கு மத்தியிலும் பகிரங்கமாக நாங்கள் 97பேரும் ஆளுநர் முன் ஆஜரானது அனைவருக்கும் தெரிந்ததே,

அரங்கநாயகம் அவர்களிடம் 70பேர் இருப்பதாக கூறுகிறார் அரங்கநாயகம் அந்தப்பட்டியலை வெளியிட தயாரா? அரங்கநாயகம் சொல்வது போல் 70உறுப்பினர்கள் இருந்தால் அவர்கள் என்ன வெளிமாநிலத்து உறுப்பினர்களா? அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினாகள் 131 பேர் தான்.

இவ்வாறு காளிமுத்து நிருபர்களிடம் கூறினார்.

## அன்னை ஜானகி அம்மையாருக்கு

# மெஜாரிட்டி ஆதரவு: ஆளுநர் குரானா திருப்தி

சென்னை. ஜன. 3- 97 சட்டமன்ற உறுப்பினர்களும் எவ்வித வற்புறுத்தலும்இல்லாமல்மனப்பூர்வமாகஜானகிஅம்மையாரை தேர்ந்தெடுத்துள்ளனர் என்பதில் பூரண திருப்தி அடைகிறேன் என் முடிவை விரைவில் அறிவிப்பேன் என்று ஆளுநர்குரானா அறிவித்தார்.

அன்னை ஜானகியை முதல்வராக தேர்ந்தெடுத்த கழக சட்டமன்ற உறுப்பினர்கள் நேற்று ஆளுநர் முன் நேரில் தங்கள் முடிவை தெரிவித்தனர்.

ஆளுநர் குரானா பின்னர் நிருபாகளிடம் கூறியதாவது:

நெடுஞ்செழியன் சார்பில் என்னை சந்தித்த அமைச்சர்கள் என்னிடம் இரண்டு கடிதங்களை கொடுத்தார்கள் அதில் ஒரு கடிதம் ஜெயலலிதா எழுதிய கடிதம் மற்றொன்றுநெடுஞ்செழியன் எழுதிய கடிதம் இந்த கடிதங்களை நன்கு படித்து ஆராய்ந்து முடிவு செய்வேன் தேவைப்பட்டால் சட்ட நிபுணர்களை கலந்து பேசுவேன் அதற்கு கொஞ்சம் அவகாசம் தேவை என்றாலும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் முடிவு எடுப்பேன்.

ஞாயிற்றுக்கிழமை எனக்கு ஓய்வுநாள் அன்று என் முடிவை எதிர்பார்க்க வேண்டாம், என்னை சந்தித்த ஜெயலலிதாவின் குழுவினர் எம்.எல்.ஏக்கள் எவரையும் அழைத்து வரவில்லை. எத்தனை எம்.எல்.ஏக்கள் உங்கள் கூட்டத்துக்கு வந்தனர். அவர்கள் பெயர் என்ன என்று கேட்டேன் நாங்கள் எங்கள் பலத்தை சட்டசபையில் நிரூபிப்போம் என்று அவர்கள் பதில் அளித்தனர்.

அதே சமயம் ஜானகி அம்மையார் தலைமையில் உள்ள குழுவினர் 97 எம்எல்ஏக்களை என் முன் நிறுத்தினர். அவர்கள்சட்டசபைஉறுப்பினர்கள் தானா என்பதை கண்டறிய சட்டசபை செயலாளர் டி கே ராமசாமி மற்றும் 4 அதிகாரிகளை அழைத்து பரிசோதித்தேன். அவர்கள் அடையாளம் காட்டினார்கள்.

ஒவ்வொரு சட்டமன்ற உறுப்பினரையும் என் அறைக்கு அழைத்து பல கேள்விகள் கேட்டேன் நீங்கள் மனப்பூர்வமாக ஆதரிக்கிறீர்களா? வற்புறுத்தலால் ஆதரிக்கிறீர்களா? உங்கள் தொகுதி என்ன என்று கேட்டேன். ஒவ்வொரு உறுப்பினரையும் விசாரிக்க சராசரி 3 நிமிடம் ஆகியது அதனால் விசாரணை முடிய 4மணி நேரம் பிடித்தது.

கடத்தப்பட்டதாக புகார் சொல்லப்பட்ட 5உறுப்பினர்களிடமும் நான் அந்தக்கடத்தல் புகார் பற்றி கேட்டேன் அதற்கு அவர்கள் பதிலளிக்கையில் நாங்கள் கடத்தப்படவில்லை அந்தக் குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்று கூறினார்கள்.

97எம்.எல்.ஏக்கள்ஒவ்வொருவரும் தனித்தனியாக ஒரு கடிதத்தில் தங்கள் தொகுதியின் பெயர் தாங்கள் ஆதரிக்கும் கட்சித்தலைவர் பெயர் போன்றவற்றை விவரமாக எழுதி என்னிடம் கொடுத்து இருக்கிறார்கள்.

அச்சரப்பாக்கம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் எத்திராஜ்உடல்நலம் இல்லாமல் மருத்துவமனையிலிருந்து ஆம்புலன்ஸ் வண்டியில் நேராக இங்கு வந்திருந்தார்.

நான் கட்டிடத்தை விட்டு வெளியே வந்து ஆம்புலன்சில் படுத்திருந்தஉறுப்பினர் எத்திராஜிடம் இந்தக்கேள்விகளை விளக்கங்களை வாங்கி இருக்கிறேன்.

97 சட்டமன்ற உறுப்பினர்களும் சொன்ன பதில்களை அப்படியே பதிவு செய்துஅதை ரெக்கார்டராக வைத்திருக்கிறேன்.

இவ்வாறு ஆளுநர் குரானா கூறினார்.

பின்னர் நிருபர்களின் கேள்விகளுக்கு பதிலளித்து ஆளுநர் கூறியதாவது:-

கேள்வி: இந்த 97 சட்டமன்ற உறுப்பினர்களையும் தனித்தனியாக நீங்கள் சந்தித்து அவர்கள் உண்மையான சட்டமன்ற உறுப்பினர்கள் தானா, மனப்பூர்வமாக ஆதரிக்கிறீர்களா என்று விசாரித்து கேட்டீர்களே? அதில் உங்களுக்கு திருப்தி தானா'

ஆளுநர்:- ஆம்.

கேள்வி:- புதிய முதல்வர் யார் என்பது பற்றி ஆளுநராகிய நீங்கள் முடிவு செய்து அறிவிப்பதற்குள் தன்னை எதிர்த்துக்கொண்டு எதிர் அணியில் இருக்கிற அமைச்சர்களை பதவியிலிருந்து நெடுஞ்செழியன் நீக்கினால் என்ன ஆகும்?

ஆளுநர்:- அது ஜனநாயகத்தை கேலி கூத்து ஆக்குவதாகும்.

இவ்வாறு ஆளுநர் குரானா கூறினார்.

## ஆர்.எம்.வீ கருத்து

சென்னை, ஜன. 3- தங்கள் பக்கம்70 எம்.எல். ஏக்கள் இருப்பதாக ஜெயலலிதா ஆதரவாளர்கள் கூறியுள்ளனரே உண்மைக்கு மாறான தகவல் கொடுத்ததற்காக அந்த கோஷ்டி மீது வழக்குத் தொடரப்படுமா என்று அமைச்சர் ஆர் எம்வீயிடம்இன்று ஒரு நிருபர் கேட்டார்.

அதுபற்றி யோசிக்கப்படும் என்று அமைச்சர் ஆர்,எம்,வீ கூறினார்,

## நாவலர்கூறியதுதவறு: ஆளுநர் அறிவிப்பு

5 எம் எல்.ஏக்களை கழக அணியினர் கடத்தி விட்டதாக நாவலர்கூறி இருந்தார் அல்லவா?

அப்படி கடத்த வில்லை அவர்கள் அன்னை ஜானகி அம்மையாரை ஆதரிப்பவர்கள் என்று எடுத்துக் கூறியும் அந்த கோஷ்டி ஏற்றுக் கொள்ளவில்லை.

இது பற்றி ஆளுநர் குரானா நிருபர்களிடம் கூறியதாவது:-

''கடத்தப்பட்டதாகக் கூறப்பட்ட 5 எம்.எல்.ஏக்களையும் விசாரித்தேன். தாங்கள் கடத்தப்படவில்லை என்று அந்தஐந்து எம். எல்.ஏக்களும் கூறினர்''

இவ்வாறு ஆளுநர் கூறியதாக ''இந்து''ஏடு கூறுகிறது.

## ஜானகி அம்மையாரை ஆதரித்த 97 எம்.எல்.ஏ.க்கள் பட்டியல் விவரம்

சென்னை. ஜன. 3- சென்னையில் நேற்று நடந்த கழக எம்.எல்.ஏக்கள் கூட்டத்தில்கலந்து கொண்டு ஜானகி அம்மையாருக்கு ஆதரவு தெரிவித்த 97 எம்.எல். ஏக்கள் பெயர் விவரம் மாவட்ட வாரியாக வருமாறு:

### சென்னை

1. கே.ஏ.கிருஷ்ணசாமி (ஆயிரம் விளக்கு தொகுதி)
2. சைதை சா. துரைசாமி (சைதாப் பேட்டை)
3. பா. வளர்மதி (மைலாப்பூர்(

### செங்கல்பட்டு

4. ஆர் எஸ் முனிரத்தினம் (கும்மிடிப்பூண்டி)
5. கே. பி. குலசேகரன் (பொன்னேரி)
6, எல்ல. ராஜமாணிக்கம் [தாம்பரம்)
7. வே. தமிழ்மணி [திருப்போரூர்]
8. ஆனூர் ஜெகதீசன் (செங்கல்பட்டு]
9. கே. எத்திராசன் (அச்சரப்பாக்கம்)
10. கே பாலாஜி (காஞ்சிபுரம்)
11. எஸ். பட்டாபிராமன் (திருவள்ளூர்)
12• இரா சண்முகம் (திருத்தணி)

### வடஆற்காடு

13) நா. சண்முகம் (சோளிங்கர்)
14) த. பழனி (ஆற்காடு)
15) கோ. ரகுபதி (காட்பாடி)
16) டி. அன்பழகன் (நாட்ராம்பள்ளி)
17) டி. சாமிக்கண்ணு (செங்கம்)
18) தண்டராம்பட்டு வேலு (தண்டராம்பட்டு)
19. மு. பாண்டுரங்கம் [கலசப்பாக்கம்]
20. இரா. கிருஷ்ணசாமி [அணைக்கட்டு]
21. எம். சின்னக்குழந்தை [ஆரணி]
22. வே. குப்புசாமி (செய்யாறு)
23. இரா. அரிக்குமார் (பெரணமல்லூர்)

### தென் ஆற்காடு

24. அமைச்சர் ப. உ. சண்முகம் [மேல்மலையனூர்)
25. எம, என் ராமஜெயம் (வானூர்)
26. விழுப்புரம் மணி (விழுப்புரம்)
27. எம். சந்திரசேகர் (முகையூர்]
28. டி.என். ஜி. ஏ. மனோகரன் (திருநாவலூர்)
29, அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் (புவனகிரி)
30. கே.ஆர். கணபதி (சிதம்பரம்)

### தர்மபுரி

31, செ. தங்கராசு [மங்களூர்]
32. எஸ் கலிதீர்த்தான் [சங்கராபுரம்]
33. டாக்டர் சமரசம் [காவேரிப்பட்டினம்]
34. கே. ஆர். சின்னராசு [கிருஷ்ணகிரி]
35. டி எம்.வெங்கடாசலம் (பர்கூர்)
36. ஆர்.இராசமாணிக்கம் (அரூர்)
37. எச்.ஜி. ஆறுமுகம் (பொண்ணாகரம்)

### சேலம்

38. செ. செம்மலை (தாரமங்கலம்)
39. ஜி.கிருஷ்ணராஜ் (சேலம்-1)
40. விஜய லட்சுமி பழனி சாமி. (வீரபாண்டி)
41, டாக்டர் கே பி ராமலிங்கம் (ராசிபுரம்)
42. எஸ் சிவபிரகாசம் (சேந்தமங்கலம்)
43. இரா. அருணாசலம் (நாமக்கல்)
44. அமைச்சர் பொன்னையன் (திருச்செங்கோடு)

### கோயம்புத்தூர்

45. மா சின்னராஜ் (மேட்டுப்பாளையம்)
46, கே வி கந்தசாமி [கிணத்துக்கடவு]
47, பி. கந்தசாமி [பொங்கலூர்]
48. பி என் பரமசிவம் [பல்லடம்]

### பெரியார்

49. கே சி பழனிச்சாமி [காங்கேயம்]
50. டாக்டர் பொன்னுசாமி [பெருந்துறை]
[illegible] அமைச்சர் முத்துசாமி
[ஈரோடு]
52) வி.பி, மாதையன் (அந்தியூர்)
53) எஸ். பாலகிருஷ்ணன் (மொடக்குறிச்சி)

### நீலகிரி

55) எம். சிவக்குமார் (குன்னூர்)
55) கே. உச்சிகவுடர் (கூடலூர)

### மதுரை

56) கா. காளிமுத்து (மதுரை கிழக்கு)
57) கே. குப்புசாமி (ஒட்டன்சத்திரம்)
58. வி.ஆர்.ஜெயராம் (தேனி)
59. எஸ்.சுப்பராயர் (கம்பம்)
60. அ.பாலுச்சாமி (நிலக்கோட்டை)
61. மு,மாரிமுத்து [திருப்பரங்குன்றம்]
62. ஏ.சிவக்குமார் (சமயநல்லூர்)
63. துணை சபாநாயகர் வி.பி.பாலசுப்பிரமணி [வேடசந்தூர்]

### திருச்சி

64. எஸ். ஜெகதீசன் [ஆவக்குறிச்சி]
65. கே வடிவேலு (கரூர்)
66. க. சோலைராஜ் [மருங்காபுரி]
67. பி. முசிறிப்புத்தன் [குளித்தலை]
68, செ. ரத்தினவேல் (முசிறி)
69. அமைச்சர் அருணாசலம் (வரகூர்)
70. எஸ். புருசோத்தமன் [அரியலூர்]
71, தில்லை காந்தி [ஆண்டிமடம்]
72. ந, நல்லுசாமி [திருச்சி-2]
73. அண்ணாதாசன் [திருவெறும்பூர்]

### தஞ்சை

74. என்.விஜயபாலன் [பூம்புகார்]
75, எம். தங்கமணி [மயிலாடுதுறை[
76, சா.ஞானசுந்தரம் [மன்னார்குடி]
77. பி.என். ராமச்சந்திரன் [பட்டுக்கோட்டை]
78. எம்,ஆர்.கோவேந்தன் (பேராவூரணி)
79. த. வீராசாமி [ஒரத்தநாடு]
80. துரை. கோவிந்தராசன் (திருவையாறு)
81. கோமதி சீனிவாசன் (வலங்கைமான்)

### புதுக்கோட்டை

82. அ. வெங்கடாசலம் (ஆலங்குடி)

### ராமநாதபுரம்

83. செ மாதவன் (திருப்பத்தூர்)
84. சுப துரைராஜ் (காரைக்குடி)
85. பொ. அன்பழகன் (இளையான்குடி)
86. ஏ. பாலுசாமி [பரமக்குடி]
87. அமைச்சர் ராமசாமி [ராமநாதபுரம்]
88. தாமரைக்கனி (ஸ்ரீவில்லிபுத்தூர்)

### நெல்லை

89. எஸ். சங்கரலிங்கம் (சங்கரன்கோவில்)
90. சண்முகய்யாபாண்டியன் (ஆலங்குளம்)
91. அமைச்சர் ஆர்.எம். வீரப்பன் (நெல்லை)
92. எஸ்.பாலசுப்பிரமணியம் (அம்பாசமுத்திரம்)
93. ஜான்வின்சென்ட் [நாங்குநேரி]
94. எஸ். ஆர். சுப்பிரமணிய ஆதித்தன். [திருச்செந்தூர்]
95. எஸ் என். ராஜேந்திரன் [தூத்துக்குடி]

### கன்னியாகுமரி

96. கோ. பெருமாள் பிள்ளை. [கன்னியாகுமரி]
97. எப்.எம்.ராஜரத்தினம் [குளச்சல்]

## இலங்கை வந்த 2 பனாமிய கப்பல்கள் தரை தட்டியது

நாகப்பட்டினம், ஜன.3 கல்கத்தாவில் இருந்து இலங்கை வந்த இரண்டு பனாமியக் கப்பல்கள் நாகப்பட்டினம் அருகே வங்கக்கடலில் தரைதட்டியுள்ளது அவற்றை மீண்டும் கடலுக்குள் இழுத்துச் சென்று கடல் மட்டத்துக்குக் கொண்டுவர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பனாமியக் கப்பல்களான எம் வி சோபியாபுரோக் மற்றும் எம் வி குலாமி ஆகிய சரக்குக் கப்பல்கள் கல்கத்தாவில் இருந்து இலங்கைக்கு திரும்பிக் கொண்டிருந்தன. இவை ஏற்றிவந்தசாக்குகளை கல்கத்தாவில் இறக்கி விட்டு திரும்பிக் கொண்டிருந்ததாக தகவல்கள் கூறுகின்றன.

அவை நாகப்பட்டினம் அருகே வங்கக்கடலில் தரை தட்டியது. சோபியா புரோக் என்ற கப்பல் அக்சனாப்பேட்டை கிராமம் அருகே தரைதட்டியது. மணற்பாங்கான இடத்தில் அது சிக்கியது. மற்றொரு கப்பல் குலாமியும் நாகப்பட்டினம் அருகே கடலில் மணலில் சிக்கியதாக வேறொரு தகவல் கூறியது. மேற்கொண்டு அந்தக்கப்பல்கள் செல்லமுடியாத நிலமை ஏற்பட்டது. கப்பல்களின் என்ஜினில் ஏற்பட்ட சிறிய கோளாறுகளே இதற்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

சாக்குகளை கல்கத்தா துறைமுகத்தில் இறக்கிவிட்டு இலங்கைக்கு திரும்பிக் கொண்டிருந்த போது இந்தச்சம்பவம் நேரிட்டது.

உடனடியாக சென்னை துறைமுக அதிகாரிகளுக்கு தகவல் அனுப்பப்பட்டது அதைத்தொடர்ந்துசென்னை துறைமுக அதிகாரிகள் நடவடிக்கை எடுத்தனர். மீண்டும் அந்தக் கப்பல்களை நடுக்கடலில் செலுத்த தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன, பொறியாளர்கள் சென்னையில் இருந்து சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்தார்கள்.

## உண்மைக்கு புறம்பாக புகார் கூறும் நாவலர்

சென்னை, ஜன. 3- கழக எம் எல் ஏக்கள் கடத்தப்பட்டதாக நாவலர் கூறியிருப்பது உண்மைக்குப் புறம்பானது என அமைச்சர் வி.வி. சுவாமிநாதன்தெரிவித்துள்ளார்

தற்காலிக முதலமைச்சர் டாக்டர் நாவலா இடைக்கால அமைச்சரவையின் நம்பிக்கையை இழந்துவிட்டார். கழகத்தின் மூத்த துணைப் பொது செயலாளர்இராகவானந்தம் கூட்டியுள்ள கழக எம். எல். ஏ. க்கள் கூட்டத்திற்கு அவர் வந்து அவர்களிடம் நம்பிக்கையை பெற்றுள்ளதாக நிரூபிக்க வேண்டும் அடுத்தசட்டமன்றக்கூட்டம் நடைபெறும் வரை தானே நீடிக்க வேண்டும் எனநாவலர் ஆளுநரைச் சந்தித்து கோரியிருப்பது [illegible] நாயகமரபுகளுக்கு விரோதமானது.

கழக எம் எல் ஏக்கள்கடத்தப்பட்டதாக கூறப்படுவது உண்மைக்கு புறம்பானது.

திருத்தணி கோவிலில் ஆங்கில வருடப் பிறப்பை முன்னிட்டு வருவோருக்கு செய்யப்பட்டுள்ள வசதிகள் குறித்து பார்க்க அங்கு சென்று விட்டுவந்தேன் அப்போது அக்கோவிலின் தக்காரும், கழக சட்டமன்ற உறுப்பினருமான சண்முகம், எனது காரில் தோட்டத்திற்கு வந்துவிட்டு சென்றார.

ஆகவே யாரும் கடத்தப்படவில்லை.

இவ்வாறு அமைச்சர் வி.வி. சுவாமிநாதன் கூறினார்.



சட்டமன்ற கழக உறுப்பினர்கள் கூட்டத்தில் அமைச்சர்கள் மற்றும் உறுப்பினர்கள்.

## "டிட்கோ" ஊழியர்கள் அஞ்சலி

சென்னை ஜன. 3- இதயதெய்வம் அமரர் புரட்சித்தலைவர் அவர்களுக்கு அஞ்சலி செலுத்த டிட்கோ நிறுவனம், அதன் துணை நிறுவனங்கள் கூட்டு நிறுவனங்களின் சார்பாகவும் அவற்றின் ஊழியர்கள் சார்பாகவும் மவுன ஊர்வலம் நடந்தது.

டிட்கோதலைவர் ஈ.வெ.கி சுலோசனாசம்பத் தலைமையில் ஊழியர்கள் அனைவரும் இதயதெய்வத்தின் நினைவிடத்திற்குச் சென்று மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

ஈ. வெ. கி. சுலோசனா சம்பத், நிர்வாக இயக்குனர் சுந்தரராஜ் ஆகியோர் அமரர் புரட்சித் தலைவருக்கு புகழஞ்சலி செலுத்தினர்,

### டி. வி. நடிகர்கள் சங்கம்

தொலைக்காட்சி நடிகர்கள் சங்கம் சார்பில் அதன் தலைவர் எஸ், எஸ். சிவசூரியன் தலைமையில் மவுன ஊர்வலம் நடந்தது செயலாளர் ராஜாமுகமது உட்பட பலர் கலந்து கொண்டு இதய தெய்வம் நினைவிடத்தில் அஞ்சலி செலுத்தினர்,

## தங்கத் தலைவா எங்கே போனாய்?

பூமியிலே பூகம்பம்
புறப்பட்டு வெடிப்பதுண்டு
இதயத்திலே பூகம்பம்
எங்கேனும வெடிப்பதுண்டா?
உதயத்தில் காலையிலே உன்மறைவால்
உள்ளம் வெடித்ததய்யா!
புதை பொருளாய் பலபொருட்கள்
பூமியிலே எடுப்பார்கள்
ஒளிவீசும் தங்கமெல்லாம்
உலகத்தில் தோண்டிடுவர்
சதைதங்கம் உன்னை இன்று-அய்யோ
சவக்குழியில் போடுகின்றார்

பதை பதைக்கும் சோகத்தாலே
பாரே கலங்குதய்யா
முதலமைச்சர் உமை பிரிந்து
மூவுலகம் வாடுதய்யா
முதலே இழந்து விட்ட
முதலாளி ஆனோமய்யா,

நிதி கேட்டு உன்னிடத்தில்
கதியற்றோர் வந்திட்டால்
நதி யாக நீ இருந்து
நன்கு வாரி வழங்கினாயே
கதி யற்று நாங்களெல்லாம்
கண்ணீர் வடிக்கின்றோம்

சதி செய்து காலனவன்
சாமத்தில் அழைத்து சென்றான்
மதி அற்ற அவன் செயலால்
மண்ணும் விண்ணும் அழுகுதய்யா.
நிதி யாக உன்னையே
நின் கருணையால் கொடுத்தாயா?

விதி வந்து பிரித்ததா? உனை
விட்டு பிரிய வைத்ததா?
சுதி அற்ற இசை போல
சோதனை சூழ்ந்தது
புதிய சகாப்தத்தின்
புலர்ச்சி மறைந்தது

வீதி ஏங்கும் உனைபிரிந்து
விம்மி அழும் தமிழ்மக்கள்
நாதி யற்ற பிள்ளைகளாய்
நடுதெருவில் நிற்கின்றோமே
பாதி யிலே விட்டு விட்டு
பதறவைத்து சென்றாயே!

சேதி ஒன்று சொல்வாயென்று
சென்னை நோக்கி வந்தவர்கள்
பாதி யிலே பிரிந்த செய்திகேட்டு
பட படத்து துடிக்கின்றோம்
கோடிஜனம் உனைக்கண்டு
கும்பிட்டு கதறுதய்யா,

வேள்வி ஒன்று நடத்தியேதான்
வேண்டும் வரம் ஒன்று கேட்டோம்
பதவி பெற்ற தலைவா நீ
பலகாலம் வாழ வரம் கேட்டோம்
கேள்வி கேட்கின்றேன்-கடவுளே
கேளா காதாய் இருந்தனையோ

இதயகனி ஆக ஏற்றார் அண்ணா
அன்று இன்றோ-அண்ணா
இதயத்து அருகினிலே ஏனண்ணா
போய் அமர்ந்தீர்
உதயத்து சந்திரனே! உனைபிரிந்து
உலகில் வாழ்வதோ!

மூத்த தலைவரெல்லாம்-நின்
முகம் காண ஓடிவந்தார்
கோத்து கை அமர்த்தி
கூப்பிடுவாய் என்று நின்றார்
பாத்து கொண்டே நீ
பள்ளி கொள்ளல் நியாயம்தானோ!

பூத்துவிட்ட மலர்கூட-நீ
தலைசாய்த்து விட்டது கண்டு
மாலை வருமுன்னே மண்ணில்விழுந்தது
மன்னன் உனக்காக மண்புரண்டு
அழுதது

சோலை மலரே! சொக்க தங்கமே!
வேளை வருமுன்னே விடைபெற்று
செல்லலாமா?

மூளை கட்டி கூட உன்
மூளை கண்டு கரைந்தது
பக்கவாதம் கூட-உனை
பார்த்துவிட்டு ஓடியது
தக்க தருணத்தில் என்தலைவா!
ஏன் பிரிந்தாய்,

பல்கலை கழகத்துக்கு
பாரி உன்பெயர் சூட்ட
சொல் மீறி உன்தொண்டன்
சொந்தத்தாய் உன் பெயரிட்டான்
சொல் காத்த நெறிச்சுடரே!
சொல்லாமல் போனாயே.
ஆசிய ஜோதி நேரு
அழகு சிலை திறந்தாய்
பேசிய உன்னை கண்டு
பெருமகிழ்ச்சி அடைந்தோமே
தேசிய திருமகனே!-நீ
பேசிய பேச்சேதான் பிரிவு விழாவோ!

சிலை வைக்க கூடாதென
நிலையாக உரைத்தாயே
"தொலை தூரம் இல்லையடா" - எனக்கு
சிலை வைக்கும் காலமென்றா
விலை இல்லா பொக்கிஷமே
விடாப்டியாய் கூறி சென்றுவிட்டாய்

சிலை வைத்து உனைகண்டு
சிரித்த முகம் காண்போமா?
கலை தாயின் தலைமகனே!
காணாமல் உயிர் வாழ்வோமா?
இலை என்ற வெறுமையுடன
இதயம் இயங்கிடுமோ.

அலைவீசும் கடலோரம்
அமர்ந்து ஓய்வெடுக்கின்றாய்
-அண்ணா

சிலை ஓரம் இருந்தேதான்
சிந்தனை செய்கின்றாய்
ஓலை ஒன்று அனுப்பியேனும்-எங்கள்
உயிர் காத்திடுவாய் என்தலைவா!

சாலை ஓரத்திலே
அலை அலையாய் உன்மக்கள்
ஓல மிட்டு அழுவது
உன் காதில் விழுகலையோ
நில த்தடியில் நீ அமர
நெடும்பயணம் தொடர்கின்றாய்,

தீங்கு என்பதறியா
தீந்தமிழ் காவியமே!
ஓங்கு கதிரவன்
உன்உயிர் பறிக்கவா வந்தான்
எங்கு சென்றீரய்யா
எமை இங்கு துடிக்கவிட்டு

இங்கு உனை காண
இருநூறு ஆயிரம் மக்கள்
தங்கு கோயிலான
தலைவா! உனை பார்ப்பதற்கு
பொங்கு கடலெனவே
புறப்பட்டு வந்தார்கள்

வங்க கடலோரம்
வந்தமர்ந்த வள்ளலே!
சிங்கத் தமிழனே!
சிறிது காலம் இருந்திருந்தால்
இலங்கை தமிழ்மக்கள்
இனிய சுதந்திரம் காண்பாய்
அடித்தளம் அமைத்துவிட்டு
அமைதியாக சென்றவரே!
முடிவில்லா உன் துயரத்தால்
முடியாமல் பதறுகிறோம்
கொடிமுல்லை பூப்போல-மீண்டும்
குலம் காக்க வந்துவிடேன்.

கு ஞானசேகரன்,
விருத்தாசலம்.

## எம்.எல்.ஏ. கடத்தல் கவர்னரிடம் கூறியது பொய்: திருத்தணி சண்முகம் பேட்டி

சென்னை. ஜன. 3- ''நான் கடத்தப்பட்டதாக கவர்னரிடம் கூறி உள்ளனர் அது பொய்யானது' என்று கழக எம் எல் ஏ திருத்தணிசண்முகம்நிருபர்களிடம் கூறினார.

திருத்தணி தொகுதி சட்டமன்ற கழக உறுப்பினர் சண்முகம் கடத்தப்பட்டதாக கவர்னரிடம் கூறப்பட்டதாக செய்தி வந்தது.

அமைச்சர் வி. வி. சுவாமிநாதனும் நானும் திருத்தணி கோவில் படி உற்சவத்திற்கான ஏற்பாடுகளை கவனிக்க சென்றோம்.

வி. வி. சுவாமிநாதன் அறநிலையத்துறை அமைச்சர் என்பதால் அவர் நேரடியாக வந்துபக்தர்களுக்கு செய்யப்பட்டுள்ளவசதிகளைப் பார்த்தார்நானும்உங்களுடன்வருகிறேன் என்று கூறி நானும் அவருடன் சென்றேன், என்னை யாரும் கடத்திச் செல்லவேண்டிய அவசியம் இல்லை.

தோட்டத்திற்கு சென்று அன்னை ஜானகி அம்மையாரைட பார்த்து ஆறுதல்கூறி எனது ஆதரவை தெரிவித்தேன்.

இவ்வாறு திருத்தணி சண்முகம் எம் எல் ஏ கூறினார்.

# கடல்நீரில் குதித்து திமிங்கலத்தை காப்பாற்றிய ராஜீவ்காந்தி

புதுடெல்லி, ஜன. 3- லட்சத்தீவு சென்றுள்ள பிரதமர் ராஜீவ்காந்தி அகாதிதீவில் கரைஒதுங்கி அவதிக்குள்ளாகியிருந்த திமிங்கலத்தை காப்பாற்றுவதற்காக கடல் நீரில் குதித்தார் மீண்டும் திமிங்கலத்தை கடலின் ஆழபகுதிக்கு அனுப்பி வைக்க தக்க ஏற்பாடுகளை உடனிருந்து செய்தார்.

பிரதமர் ராஜீவ்காந்தி லட்சத்தீவுகளில் சுற்றுப்பயணம் செய்து வருகிறார்.

லட்சத்தீவுப் பகுதிகளில் ஒன்றான அகாதிதீவில் கடல் நீர் தரையையொட்டி பரந்து கிடக்கிறது கடல் நீரும் கடற்கரை தரைப்பகுதியும் கலந்து காணப்படும்.

வழக்கமாக கடலின் ஆழப் பகுதியிலேயே வசிக்கும் திமிலங்களில் ஒன்று அகாதி தீவின் கரையில் எப்படியோ ஒதுங்கிவிட்டது இன்னும் கொஞ்ச நேரம் அப்படியே இருந்திருந்தால் அந்தத் திமிங்கலம் பரிதாபமாக உயிர் நீத்திருக்கும் இந்த நிலைமையைப் பார்த்துகொண்டிருந்த பிரதமர் ராஜீவ் காந்தி உடனே கடல் நீரில் குதித்தார் அவருடன் பாதுகாப்பு அதிகாரிகளும்போலீசாரும்நீரில்குதித்தனர்.

நீர்பாவிக் கிடந்த தரைப் பகுதியில் இருந்த திமிங்கலத்தை கயிற்றால் லேசாக சுற்றி மீண்டும்கடலின் ஆழப் பகுதிக்கு கொண்டு செல்லப் பட்டது,

கடலின் உட் பகுதிக்குச் சென்ற திமிங்கலம் சிரமம் இன்றி மூச்சு விட்டது மகிழ்ச்சியுடன் நீரில் மூழ்கி மூழ்கிச் சென்றதைப் பார்த்த பிரதமரும் உடன் இருந்தவர்களும் மகிழ்ச்சி அடைந்தனர்.

பிரதமரின் உடனடி முயற்சியை மக்கள் பாராட்டிப் பேசினர்.

அந்த திமிங்கலம் சுமார் 6 மீட்டர் நீளம் உள்ளது.

தீவான் தீவின் மற்றொரு பகுதியிலும் வேறொரு திமிங்கலம் கரைக்கு வந்திருந்தது ஆனால் அதைமீண்டும் ஆழப்பகுதிக்கு கொண்டு செல்வதற்கு முன்பே இறந்தது லட்சத்தீவுகள் நிர்வாக அதிகாரி வாஜாஆத் அபிபுல்லா நிருபர்களிடம் தெரிவித்தார்,

## பேரூர் ஆலயத்தில் அன்னதானம்

கோவை, ஜன. 3- இதயதெய்வத்தின் மறைவையொட்டி கோவை பேரூர் பட்டீஸ்வரன் ஆலயத்தில் சிறப்புவழிபாடும் ஐயாயிரம் ஏழைகளுக்கு அன்னதானமும் வழங்கப் படுகிறது.

கோவை மாவட்ட எம் ஜி ஆர் மன்றத் தலைவரும் கோவைமாவட்ட பால் வளத் தலைவருமான பேரூர் சண்முகசுந்தரம் இதற்கான ஏற்பாட்டை செய்துவருகிறார்.



இதய தெய்வம் புரட்சித்தலைவரின் துணைவியார் அன்னை ஜானகி அம்மையாரை முதல்வராகத் தேர்ந்தெடுத்த சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம்.

## அன்னையை சந்தித்து தாய்மார்கள் வாழ்த்து

சென்னை, ஜன. 3- சட்டமன்ற தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட அன்னை ஜானகி அம்மையாரை திரளான மக்கள் சந்தித்து தங்கள் வாழ்த்துக்களை கூறினர்.

நேற்று மாலை இதய தெய்வம் இல்லத்தில் திரளான பொதுமக்களும் கழக முன்னணியினரும் கூடியிருந்தனர். அன்னை ஜானகி கூப்பிய கரங்களுடன் பொது மக்கள் இருந்த பகுதிக்கு வந்தார்.

அங்கே திரளாக கூடியிருந்த மக்கள்வாழ்த்துமுழக்கங்களை எழுப்பினர்.

தமிழகத்தை காக்க வந்த தங்கமே, தாயேஉன்தலைமையில் நாங்கள் செயல் படுவோம் என்றனர்.

நேற்று மாலை இதய தெய்வம் இல்லத்தில் வாரியத் தலைவர்கள், சுலோசனா சம்பத். அங்கமுத்து கல்யாணி ராமசாமி, நா, காமராசன். முத்துராமலிங்கம், செங்கம் ஜப்பார் அக்ரோ ராஜேந்திரன, திருப்பூர மணிமாறன், பெரியார் மாவட்ட கூட்டுறவு வங்கித் தலைவர் சின்னசாமி, கூட்டுறவு நூற்பாலைத் தலைவர் கள்ளிப்பட்டி மண் திருப்பூர் கேசவன் பால்வளத்தலைவர்கள், பேரூர் சண்முகசுந்தரம் சாகுல் அமீது. அப்பன்பழனிசாமி, தர்மபுரி சேகர் மற்றும் பேரவைப் பொதுச் செயலாளர் வேல்முருகன்; தலைவர் யூ. ஆர். கிருஷ்ணன் மற்றும் நா, கருப்புசாமி, வை பெருமாள், மற்றும் ஒப்பனை கலைஞர் பீதாம்பரம், சம்பங்கி, ஆனைமலை உசேன், மதுரை இளவரசன் லோகநாதன் பிச்சை, வெடி சண்முகம் துறைமுகம் காஜா சைதை கடும்பாடி மகாலிங்கம் மற்றும் திரளான பிரமுகர்கள் ஜானகி அம்மையாருக்கு வாழ்த்து தெரிவித்தனர்.

## காதி ஊழியர்கள் அஞ்சலி

சென்னை, ஜன, 3- சென்னை கடற்கரையில் இதய தெய்வம் நினைவிடம் சென்று காதி இலாகா ஊழியர்கள் அஞ்சலி செலுத்தினர் கதர் வாரிய துணைதலைவர் கவிஞர் நா. காமராசன், வை. பெருமாள் ஜி. வேல்முருகன் ஜி. ராமசாமி,மணி சுந்தரம், தனகோபால், பழனிசாமி, ரங்கராஜ் சேலம் கருப்பண்ணன் அன்பழகன் மற்றும் பலர் அஞ்சலியில் கலந்து கொண்டனர்.

## பொய் செய்திக்கு வை.பெருமாள் மறுப்பு

சென்னை, ஜன, 3 முன்னாள் அண்ணா பேரவை பொதுச் செயலாளரும், கழக பொதுக்குழுஉறுப்பினருமான வை. பெருமாள் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:.

போட்டி கோஷ்டி கூட்டத்தில் நான் கலந்துகொண்டதாக சில பத்திரிகைகளில் வந்துள்ள செய்தி தவறானது. நான் என்றும் இதய தெய்வம் புரட்சித் தலைவர் கொள்கை வழி நடப்பவன். அவர் தமவார்சாம் அன்னை ஜானகித்தாய் தலைமை ஏற்றுச் செயல்பட்டு வருபவன் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு வை. பெருமாள் கூறியுள்ளார்.

## காலமானார்

சென்னை, ஜன். 3 திருவல்லிக்கேணி தொகுதி கழகப் பொருளாளர் தீனன் காலமானார். இறுதி ஊர்வலத்தில் ஜேப்பியார் மற்றும் பாஸ்கரன், ராஜேந்திரன், நடராஜ் உள்ளிட்ட பலகழகத்தோழர்கள் கலந்து கொண்டனர்.

## நர்கீஸ் சகோதரர் மறைவு

பம்பாய், ஜன. 3- பிரபல இந்தி திரைப்பட நடிகையும் முன்னாள் எம்.பியுமான காலஞ் சென்ற நர்கீசின் சகோதரர் அன்வர் உசேன் இன்று பம்பாயில் மாரடைப்பால் காலமானார்





## பட்டினபாக்கம் வீட்டுவசதி வாரிய ஊழியர்கள் மவுன அஞ்சலி

சென்னை, ஜன, 3 சென்னை பட்டினபாக்கத்தில் உள்ள தமிழக வீட்டு வசதி வாரிய உதவி நிர்வாக பொறியாளர் அலுவலகத்தை சேர்ந்த ஊழியாகள் இதய தெய்வம் புரட்சித்தலைவரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து இரங்கல் தெரிவித்தனா.

உதவிப்பொறியாளர் சவரியப்பன் தலைமையில் பில்டிங் இன்ஸ்பெக்டார்கள் எ. துரை, பத்மநாபன் மற்றும் பி. ஆறுமுகம், என். மனோகரன், எம். பழனி. வி. பாலன், முனுசாமி, ஆதிமூலம், வேதகிரி மற்றும் சக ஊழியர்கள் பலரும் இந்த இரங்கல் கூட்டத்தில் கலந்து கொண்டு கண்ணீர் அஞ்சலி செலுத்தினார்கள்.

## புரட்சித்தலைவருக்கு அனைத்து கிறிஸ்தவர்கள் இரங்கல்: பிஷப்சுந்தர்கிளார்க் தகவல்

சென்னை, ஜன. 3- இதயதெய்வம் புரட்சித் தலைவர் மறைவு குறித்து அனுதாபம் தெரிவித்து அனைத்து கிறிஸ்துவ மக்களும் இரங்கல் தெரிவித்து பிரார்த்தனை நடத்தினார்கள் என்று பிஷப்சுந்தர்கிளார்க் தெரிவித்தார்.

தென்னிந்திய திருச்சபை (சி.எஸ்.ஐ) பேராயர் சுந்தா கிளார்க் சென்னையில் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:-

மறைந்த தமிழக முதல்வர் எம்.ஜி ஆர். ஒரு மாபெரும் சமூக சீர்திருத்த மகான். அனைத்து பிரிவு மக்களாலும் போற்றப்பட்டு வந்தவா. சிறுபான்மை மக்கள், குறிப்பாக கிறிஸ்துவர்களுக்கு பேருதவி செய்தவா.

ஏழை எளிய மக்களின் பால் பேரன்பு கொண்டு அவர்களின் முன்னேற்றத்துக்கு தன்னுடைய வாழ் நாளெல்லாம் உழைத்தவர்.

தமிழகத்தை தன்னுடைய சக்திவாய்ந்த திறமையான நிர்வாகத்தால் நடத்திச் சென்றவர் அவர் கொண்டு வந்த சத்துணவு திட்டத்தை உலக நாடுகளே பாராட்டி வருகிறது.

மறைந்த முதல்வரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து சென்னையில் உள்ள அனைத்து கிறிஸ்தவ மக்களும் இரங்கல் கூட்டம் நடத்தினார்கள். கத்தோலிக்கர்கள், பராட்டஸ்டெண்ட் கிறிஸ்தவர்கள் மார்த்தோமா-சிரியா ஜாக்கோபைட் கிறிஸ்தவர்கள் லூத்தரன் கிறிஸ்தவர்கள் இரட்சிப்பின்படையினா இப்படி பல்வேறு கிறிஸ்தவ மக்களும் இந்தபிரார்த்தனை கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

சென்னையில் உள்ள புனித ஜார்ஜ் கதீட்ரல் தேவாலயத்தில் இந்த இரங்கல் கூட்டம் நடைபெற்றது.

சென்னை ஆர்ச்பிஷப் கசிமிர்ஞானாதிக்கம் மற்றும் பல கிறிஸ்தவமதத் தலைவர்கள் கலந்துகொண்டனா. எங்களுடைய ஆழ்ந்த அனுதாபத்தை முதல்வரின் குடும்பத்துக்குதெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறு சுந்தர் கிளார்க் கூறினார்.

## கோடி மக்கள் சூடுகின்ற தேவரோஜா!..

### கவிஞர் இ. முத்துராமலிங்கம்

● கோடி மக்கள் சூடுகின்ற தேவரோஜா!! உன்னை
கூற்றுவனும் சூடலாமோ ராஜராஜா!..
வாடி நிற்கும் தமிழ்ப் பயிரின்
வான் மழையே!..
வாகை சூடும் சேரர்குலப்
பெருங்கொடையே!
மின்னலென வாள் சுழற்றிக்
கொடியில்
மீன் வளர்த்த பாண்டியனே!..
இன்று-
இன்னலெனும் இருட்கடலில்
எம்மை-
ஏங்க விட்டுச்சென்ற தென்ன?..

● சந்தனப் பேழையில்
சரித்திர ராகம் மீட்டும்
சத்திய வீணையே!..
நீ-
நேருவுக்குச் சிலை வைத்த
நிம்மதியில் துயில்கிறாயா?..
ஆம்!..
நேரு - ஒரு
ஜனநாயக ரோஜா!..
நீயோ-
ஜனங்களின் ராஜா!..

● காந்தியின் இதயக்கனி
அந்தக்
காஷ்மீர் ரோஜா!..
தென்னாட்டுக் காந்தியின்
இதயக்கனி நீயோ
எங்கள்
கனவுகளின் ராஜா!..

● ஒரு
ராஜ வீணை புதைக்கப்பட்டது!
அந்த
நாத வீணையின்
நரம்புகள் அறுந்தாலும்
அதன்
ராக கீதங்களைப்
புதைக்க வல்லார் யார்?....
அந்த
திராவிட வீணையின்
தேவராகங்கள்
இந்த நாட்டின்
காற்றிலும் கடல் அலைகளிலும்
விண்ணிலும் மண்ணிலும்
வியாபித்தே இருக்கும்!...
நீ
காலத்தை வென்ற தலைவன்!...
இருமுறை
காலனையும் வென்ற தலைவன்!...
பலமுறை கேட்டால் நீ
பகைவனுக்கும் அருள்பவன்!...
அதனால் தான்-
இருமுறை தோற்ற எமனுக்கும்
மூன்றாம் முறை-
தர முடியாத உயிரையும்
கொடையாய்த்தந்து விட்டாய்!....
ஆமாம்!...
கொடையில்
கர்ணனையும் வென்றுவிட்டாய்!...

அகத்தைக் காட்டிய
அண்ணா-
புறத்தைக் காட்டிய
அண்ணா
உன்னைத் தான்
முகத்தைக் காட்டச் சொன்னார்..!

● அந்த முகம்
அழகு முகம் மட்டுமல்ல;
மக்கள்
பழகு முகம்-பண்பு முகம்-
அன்புமுகம்-ஆற்றல் முகம்-
வெற்றிமுகம்-வீர முகம் கொண்ட
ஆறுமுகம் என்பதால்தான்
அந்த
அறிவு முகமே உன்னை
அறிமுகமும் செய்தது!....

● விண்ணுலக மக்களுக்கும்
உன்
வெளிச்ச முகம் காட்டத்தான்
ஒரு
விடியலில் உன்னை அந்தக்
கொடியனாம் காலனும்
கூட்டியும் சென்றானோ?....

● காலதேவன் ஒரு
கடத்தல் காரன்!....
அவன் எங்கள்
கனவுக் கப்பலைக்
கொண்டு போய்
பரணத் தீவில் ஒளித்து விட்டான்!....

ஓ!.. தலைவா!....
● நீ!...
எழுந்தால் இமயம்....
நடந்தால் கங்கை....
சிரித்தால் வசந்தம்....
சீறினால் பிரளயம்!....

● மரணத்தின் பின்னும்
கோடி கோடி
மனங்களின் தரிசனம் நீ!....

● அச்சத்தைப் பொசுக்குவோம்!....
அகிலத்தை திருப்புவோம்!....
நட்சத்திரங்களை நொறுக்கி
சந்திரன் உன்புகழால்-புதிய
சரிதப்பாதை படைப்போம்!....

● எரிமலை விருட்சங்களில்
இளவேனில் கூடுகட்டும்
பொன்வேளைக் கனவுகளில்
உன் பூபாளம் கேட்கட்டும்!....
போர்வாள்கள் உயரட்டும்!....

● வாழி நின்புகழ்
ஆழிசூழ் அவனிமட்டும்!!



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-600029.

# இதயதெய்வத்திற்கு திரைப்பட கலைஞர்கள் கண்ணீர் அஞ்சலி





கட்சி- ஆட்சி பொறுப்பேற்க வருக என அன்னை ஜானகி அம்மையாரை கழகத்தோழர்கள் அழைத்தனர். சோகமே உருவாக அன்னை அந்த கோரிக்கையை ஏற்றபோது எடுத்த படம்.

சென்னை, ஜன. 3- இதய தெய்வம் புரட்சித் தலைவர் மறைவுக்கு திரைப்பட கலைஞர்கள் அஞ்சலி செலுத்தினர்.

இதய தெய்வம் மறைவுக்கு அஞ்சலிசெலுத்தும் வகையில் தென் இந்திய திரைப்பட உலகின் அனைத்துபிரிவினர் சார்பில் சென்னையில் இரங்கல் தெரிவித்து மவுன ஊர்வலம் நடைபெற்றது. இரங்கல் கூட்டம் ராஜாஜி மண்டபத்தில் நடந்தது. இந்தக் கூட்டத்திற்கு சிவாஜி கணேசன் தலைமை வகித்தார்.

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி சிவாஜி கணேசன் பேசியதாவது:-

அருமை அண்ணனின் இரங்கல் கூட்டத்தில் என்னுடைய வேதனை நிறைந்த வரவேற்பை தெரிவித்துக் கொள்கிறேன். மனிதன் வாழ்வதும், மறைவதும் இயற்கை. வாழ்ந்தபோது அவன் எப்படி வாழ்ந்தான், என்ன செய்தான் என்பது தான் முக்கியம். ஒருமனிதன் எப்படி வாழ்ந்தான் என்பதற்கு அவன் இறந்த பிறகு அவனுக்கு கிடைக்கும் மரியாதை பெருமையை வைத்து இருக்கிறது. அண்ணன் எம். ஜி. ஆர். வாழும் போதும், மறைந்த போதும் புகழுடன் வாழ்ந்தார்.

நானும் அண்ணனும் சிறு வயது முதலே ஒன்றாக ஒரே குடும்பமாக வாழ்ந்தோம் அந்த நினைவுகள் என் இதயத்தில் எழுகின்றன இடைக்காலத்தில் அரசியல் காரணமாக வெவ்வேறு முனைகளில் நாங்கள் இருந்தாலும் எங்களிடையே இருந்த நட்பு என்றுமே பிரிக்க முடியாததாக இருந்தது அதிலும் கடந்த மூன்று ஆண்டுகளாக அண்ணனும் நானும் தனியாகவோ மறைவாகவோ சந்திக்கத் தவறுவதே இல்லை,

இந்த முறை அண்ணன் அமெரிக்கா செல்லும் போது டெல்லியிலிருந்து எனக்கு 25 ஆண்டுகளுக்குப் பிறகுகடிதம் எழுதினார் அதன் பின்தான் நான் அமெரிக்கா சென்றபோது அண்ணனை சந்தித்தேன் பிரதமர் சென்னை வந்தபோது விமான நிலையத்தில் அண்ணனும் நானும் சந்தித்தோம் 29ந்தேதி தன்னை வந்து சந்திக்குமாறு என்னிடம் கூறினார் 29லந்து போய்விட்டது.

நாங்கள் சந்திக்க வில்லை. எங்கள் சந்திப்புநடந்திருந்தால்அரசியலில் நல்ல திருப்பம் ஏற்பட்டிருக்கும் என்பது என் எண்ணம்.

அண்ணன் அவர்கள் நம்முடன் வாழ்ந்தவர். நம்முடன் இருந்தவர், நமக்கு புகழ் சேர்த்துக் கொடுத்தவர். அந்த நல்லவரை, மக்கள் தலைவரை இழந்து வாடுகின்ற நமது கலை சமுதாயம் அவா என்ன என்ன நன்மைகள் செய்து வழி காட்டினாரோ அந்த வழியில் நடக்க வேண்டும்.

கலைஞர்கள் உள்ளத்தில் வாழ்பவர்கள் இருவர் ஒருவர் கலைவாணர் என். எஸ். கே. மற்றொருவர் புரட்சித்தலைவர்.

பத்து ஆண்டுகளாக அவர் எப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்ந்தார் என்பது அவரின் மறைவின் போது உலகிற்கே தெரிந்தது

கலை உலகம் நன்றி மறவா உலகம் என்பதை அண்ணனின் நினைவாக இருந்து காட்டவேண்டும். நீங்கள் இங்கு வந்ததுஎனக்கு மிகப் பெருமை. அவர்செய்ய நினைத்ததை நாம் செய்வது தான் அவருக்கு செலுத்தும் அஞ்சலி.

அருமை அண்ணன் அவர்கள் மக்களிடம் காட்டிய அன்பு தொழிலாளர்களிடமும் கோடான கோடி ஆதி திராவிட மக்களிடமும் காட்டிய பரிவு தமிழ் போல் மழைபோல் இருக்க வேண்டும் அவர் புகழ் அருவிபோல்"தென்றல்போல் வாழவேண்டும் வாழ்நாளில் அவர்கடைபிடித்த கொள்கை ஆல்போல் தழைத்து அருகு போல் வளர்ந்து கொண்டே இருக்கும். அண்ணன் எம் ஜி ஆர் புகழ் ஓங்குக

இவ்வாறு சிவாஜிகணேசன் பேசினார்

## ஜீ. வி.

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி தென் இந்திய திரைப்பட வர்த்தக சபை தலைவர் ஜீ. வி. பேசியதாவது:-

ராமாயணத்தின் நாயகர் ராமச்சந்திரமூர்த்தி புகழ் நிலைத்து நிற்பதுபோல்நமது முதல்வர் புகழ் தமிழ்மொழி இருக்கும் அளவிற்கு வானளாவ உயர்ந்திருக்கும்.

அவர் மறைவின் போது அவருக்கு உலக அளவில் கிடைத்த மரியாதையும் பாராட்டும் அனுதாபமும் அளவிடமுடியாதது. எந்த முதல்வர் இறந்த போதும் தேசிய விடுமுறை விட்டதில்லை அந்தப்பெருமையை தமிழகத்திற்கு புரட்சித்தலைவர் தந்து விட்டு சென்றிருக்கிறார். அந்த ஒப்பற்றவரின் ஆத்மா சாந்தி அடைய அனைவரும் பிரார்த்திப்போம்.

இவ்வாறு ஜீ.வி.பேசினார்.

## டி. ராமானுஜம்

அகில இந்திய திரைப்பட அதிபர்கள் சங்கத்தின் துணைத் தலைவர் டி. ராமானுஜம் பேசும்போது கூறியதாவது:-

திரை உலகம் ஒன்றாக இருக்க வேண்டுமென்று அடிக்கடி முதல்வர் கூறுவார் அது இப்போது நடைபெறுகிறது. எந்த ஒரு தனிப்பட்ட மனிதர் இறந்தாலும் கிடைக்காத பெயரும் புகழும் கலை உலகைசேர்ந்த நமது முதல்வருக்கு கிடைத்துள்ளது. அதுநமக்கெல்லாம் பெருமையாக இருக்கிறது. அவர் எவ்வளவு பெரிய மனிதர் என்பது 1984ம் ஆண்டு அவர் உடல் நலிவுற்று சிகிச்சை பெறும் போது எல்லா மக்களும் பிரார்த்தனை செய்து அந்த உயிரை மீட்டுக் கொண்டு வந்ததிலிருந்தே உலகம் அறிந்து கொண்டது.

அவருடைய மறைவுக்கு இறுதி அஞ்சலி செலுத்த இந்தியகுடியரசுத் தலைவர் உபதலைவர், பிரதமர் ஆகியோர் வந்தது யாருக்கும் கிடைக்காத மாபெரும் புகழ் மிக்கது.

அவர் நலிவுற்றிருந்த போது நான் காஞ்சிபுரம் சென்று பெரியவரை தரிசிக்க சென்றேன் எம் ஜி ஆருக்காக மக்கள் செய்தபிரார்த்தனைகளை கேள்வியுற்ற பெரியவர் எம். ஜி. ஆர். எங்களை எல்லாம் விட பெரியவராகி விட்டார் என்றார் அப்படிப்பட்ட பெரியவருக்கு நமது அஞ்சலியை செலுத்துவோம்.

இவ்வாறு டி ராமானுஜம் பேசினார்.

## வலம்புரி சோமநாதன்

வலம்புரி சோமநாதன் பேசும்போது கூறியதாவது:-

எம் ஜி ஆரின் வாழ்க்கை தனி மனித வாழ்வாக தொடங்கி தமிழக வரலாறு ஆகி இந்திய வரலாறு ஆகி இதையெல்லாம் கடந்து உலக வரலாறு ஆகும் வகையில் இலங்கை பிரச்சினையில் சமரச தீர்வுக்கு வழிவகுத்தார்.

திரைப்படங்கள் வெறும் பொழுது போக்கு சாதனமல்ல சமுதாயத்தில் மண்டிக் கிடக்கும் அழுக்கைப்போக்க அதைப் பயன்படுத்த முடியும் என்று நிரூபித்துக் காட்டியவர். அவர்செய்ததை தொடர்ந்து நாம்செய்வது தான்அவருக்கு செய்யும் அஞ்சலி.

இவ்வாறு வலம்புரிசோமநாதன் பேசினார்.

## சரவணன்

இதயதெய்வத்துக்கு அஞ்சலிசெலுத்திஸ்டுடியோக்கள் உரிமையாளர்கள் சார்பில் ஏ.வி.எம். சரவணன் பேசியதாவது:-

வாழும் போதே வரலாறு ஆனவர்கள் சிலர் தான். அதைப் பெற்றவர் புரட்சித்தலைவர் தமிழகத்திற்கு அவர் பல பெருமைகளைச் சேர்த்தவர். உயர்ந்த உள்ளமும், தாய்ப்பாசமும் மிக்கவர். கலைக் குடும்பத்தின் மூத்தவர். அவர் பிறருக்கு செய்த நன்மைகள், உதவிகள் கணக்கில் அடங்காதவை.

உலகிலேயே ஒரு நடிகர் முதல் முறையாக ஆட்சி கட்டிலில் ஏறி சாதனை புரிந்தார் என்றால் அது நமது முதல்வர்தான். அவருக்குபின்தான் ரீகன் ஜனாதிபதியானார். அவர் கொடுப்பதை இங்கிருக்கும் பலரும் அறிந்தவர்கள், தாய் பாசத்தோடு பழகிய அந்த அண்ணனை இழந்து நிற்கிறோம். அவர் பிரிவால் வாடும் அவரது துணைவியார் ஜானகி அம்மையாருக்கு ஆறுதலை தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறு ஏ.வி.எம். சரவணன் பேசினார்.

## பாரதிராஜா

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி இயக்குநர் பாரதிராஜா பேசியதாவது:-

ஒரு காலத்தில் மண்ணில் அமர்ந்து அவரது ரசிகனாக படம் பார்த்தவன் அவரோடு பழகிய போதுதான் அவர் எத்தகைய மாமனிதர் என்பதை அறிந்தேன்.

டாக்டர் பட்டம்அவருக்கு கிடைத்த போது கலை உலக சார்பில் விழா எடுத்த போது எனக்கு கிடைத்த பேற்றையும் அவரது உடலைதொட்டு தூக்கி வேனில் ஏற்றியதையும் என்னால் மறக்க முடியாது கடைசியாக அவர் எனது வேதம் புதிதுபடத்தை தான் பார்த்தார்

இவ்வாறு பாரதிராஜா பேசினார் (சோகமேலீட்டால் பேச முடியாமல்பாரதிராஜா தனது பேச்சை முடித்தார்)

## ராதாரவி

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி தென்னிந்திய நடிகர் சங்கத் தலைவர் ராதாரவி பேசியதாவது:-

புரட்சித்தலைவர் பொன் மனச்செம்மல் இப்படிப் பல பட்டங்களைப் பெற்றமுதல்வர் இன்று நம்மிடம் இல்லை அவர் மறையவில்லை நம்மோடுதான் இருக்கிறார். நான் கோவைக்கு சென்றிருந்த போது சில மாதங்களுக்கு முன் முதல்வர் அவர்களை விமான நிலையத்தில் சந்தித்தேன் என்னிடம் எந்த வித்தியாசமும் காட்டாது பேசினார் எங்கள் குடும்பத்திற்கு மிகவும் வேண்டியவர்.

நான்நடிகர்சங்கத் தலைவராக ஆன போது புரட்சித் தலைவர் இருக்கிறார் நடிகர் சங்கத்துக்கு உள்ள கடன்களையும், சங்கடங்களையும் சமாளித்து விடலாம் நமக்கு ஒரே தலைவர் உதவிக்கரம் நீட்டுகிறவர் இருக்கிறார் என்ற நம்பிக்கையில் இருந்தேன் எங்கள் கெட்ட நேரம் அவர் மறைந்து விட்டார் நடிகர் சங்க கஷ்டத்தை தீர்ப்பது தான் நாம் முதல்வருக்கு செய்யும் அஞ்சலி முதல்வர் அவர்கள் நடிகர் சமுதாயத்திற்கு செய்த நன்மைகள் ஏராளம் அவர் ஆத்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறேன்.

அவரை இழந்து வாடும் ஜானகி அம்மையாருக்கும், அவரது தொண்டர்களுக்கும் என்சார்பாகவும், குடும்ப சார்பாகவும், திராவிட இயக்கத்தின் சார்பாகவும் அஞ்சலி செலுத்துகிறேன்.

இவ்வாறு ராதாரவி பேசினார்.

## பிரேம்நசீர்

நடிகர் பிரேம்நசீர் பேசும் போது நினைத்ததை முடிப்பவர் யார் என்றால் நமதுபிள்ளைகள் எம்.ஜி.ஆர் என்று கூறும் மக்களை அதிகமாக நேசித்தவர் எம்.ஜி.ஆர் சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியில் அவரை நான் சந்தித்தேன் இவ்வளவு விரைவில் அவர் மறைவார் என்று துளி அளவு கூட நினைக்க வில்லைஎன்று வேதனையுடன் கூறினார்.

## கே. ஆர்.

தென் இந்திய சினிமா வர்த்தக சபை தலைவர் கோதண்டராமன் பேசும் போது கூறியதாவது:,

புரட்சித்தலைவர் அவர்கள் அடிக்கடி ரத்தத்தின் ரத்தமே என்று கூறுவார் இப்போது நம்எல்லோரின் ரத்தத்தின் ரத்தமாகி விட்டார். அவரது திரைப்பட பாடல்கள் இலக்கியமாக விளங்குகிறது திரை உலகுக்கே அவர் ஒரு பாதுகாவலனாக விளங்கினார் ஏழை எளியோருக்கு அள்ளி அள்ளிவழங்கும்அட்சய பாத்திரமாக அவர் திகழ்ந்தார் அவர் ஆத்மா சாந்தி அடைய இறைவனை பிரார்த்திக்கிறேன்.

அவரை இழந்து வாடும் அவர் குடும்பத்தினருக்கும் அவர் பிரிவைத் தாங்க முடியாது உயிர் நீத்த குடும்பத்தினருக்கும் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு கே ஆர் பேசினார்.

## உமாபதி

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்திபட அதிபர் உமாபதி பேசியதாவது.

பொன்மனச் செம்மல் சாதனைகள் பற்றி ஒவ்வொருவரும்எடுத்துக்கூறினார்கள் அவருடைய வாழ்வு ஒரு திறந்தபுத்தகம் உலகம் அறிந்த மாமனிதராக அவர் வாழ்ந்தார் இந்திய சரித்திரத்திலேயே ஒரு முதல்வர் இந்த தேசத்தின் சொத்து என்று தேசிய விடுமுறை அறிவித்தது பொன்மனச் செம்மலுக்குத்தான் அவரது தர்ம சிந்தனை பற்றிக் கூறுவது காவியங்களாக இருக்கும்

பிறரின் துன்பத்துக்காக உதவியதுடன் அந்த துன்பத்தில் தானும் பங்குகொள்பவர். அவருடன் 40 ஆண்டு காலம் பழகியவன் அவர் இந்த மனித சமுதாயத்திற்கு செய்தது மிகப்பெரியது நம் தலைவராக, வழிகாட்டியாக அவர் விளங்கினார், இப்படித்தான் வாழவேண்டும் என்று நம் சந்ததிகளுக்கு எடுத்துக் காட்டும் வகையில் வாழ்ந்தார். அவருடைய வாழ்க்கை வரலாற்றைப் பாடப்புத்தகத்தில் இடம் பெறச்செய்வது எதிர்கால சந்ததிகள் சிறப்பாக அமைய உதவும்.

இவ்வாறு உமாபதி பேசினார்.

## மனோரமா

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் நடிகை மனோரமா கண்ணீர் மல்க பேசியதாவது:-

கலை உலகமே பெருமை படக் கூடிய அளவிற்கு வாழ்ந்தவர் அண்ணன் கலைஞர்களுக்கு அவர் வழி காட்டியாக இருந்தார், ஒரு நிமிடம் கூட அவர் அதைக் குறைத்துக் கொள்ள வில்லை. அண்ணன் அவர்கள் அரசியலுக்குவரவில்லையென்றால் இன்னும் 20 ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருப்பார்.

அவரது 10 ஆண்டு கால அரசியல் உழைப்பு தான் அவரை இவ்வளவு சீக்கிரம் நம்மிடமிருந்து பிரித்து விட்டது. வாழ்ந்தால் இப்படித் தான் வாழ வேண்டும் என்று வாழ்ந்து காட்டி நீங்கா புகழ்பெற்றஅண்ணன் ஆத்மாசாந்தி அடைய இறைவனை பிரார்த்திப்போம்

இவ்வாறு மனோரமா பேசினார்

மனோரமா, பேசும்போது பல சமயங்களில் உணர்ச்சி மேலீட்டால் கண்ணீர் உகுத்தார்.

## தர்மலிங்கம்

ஸ்டன்ட் கலைஞர்கள் சார்பில் இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி எம். கே. தர்மலிங்கம் பேசியதாவது;-

செய்யும் தொழிலே தெய்வம் என்று ஒரு சாதாரண கலைஞனாக திரைப்படத்துறையில் நுழைந்து அந்தத் தொழிலையே காப்பாற்றும் தெய்வமாக வாழ்ந்தவர் புரட்சித்தலைவர்.

படங்களை தணிக்கை செய்யும் உரிமை திரைப்படத் துறையை சேர்ந்தவர்களுக்கு கிடைக்க வேண்டும் என்று புரட்சித் தலைவர் விரும்பினார். அந்த அன்பு தெய்வத்துக்கு அஞ்சலியை செலுத்திக்கொள்கிறேன்.

இவ்வாறுதர்மலிங்கம் கண்ணீர்மல்ககூறினார்,

## ராஜேந்தர்

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் இயக்குனர் டி. ராஜேந்தர் பேசியதாவது:-

மறைந்த முதல்வர் அவர்கள் தமிழ் திரை உலகின் ஒரு மூத்த கலைஞராக இருந்து சாதனைபல புரிந்து சரித்திரம்படைத்த மாபெரும் தலைவர் திரைஉலகிலிருந்து அரசியலிலும் அவர்சரித்திரம் படைத்திருப்பது திரை உலகிற்கு பெருமை.

சரித்திரம் படைத்த அவர் அமரராகிவிட்டார். அவர் நடித்த படங்கள் மூலம் மக்கள் நெஞ்சத்தில்நிலைத்து நிற்கிறார், தர்மம் தலை காக்கும் படத்தில் நடித்தார் அதை வாழ்க்கையில் கடைப்பிடித்தார். அதனால் மக்கள் மனதில் இடம் பிடித்தார். அவருடைய ஆத்மா சாந்தி அடைய பிரார்த்திப்போம்.

இவ்வாறு டி. ராஜேந்தர் பேசினார்-

## தங்கவேலு

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி நடிகர் தங்கவேலு பேசியதாவது:

எம் ஜி ஆர் அவர்கள் இமய மலையை விட பல மடங்கு உயர்ந்த கலைக்கோவில் அந்தக்கலைக் கோவில் சாய்ந்து விட்டது அவர் செய்த உதவிகளை நினைக்கும்போது தாங்க முடியாத அளவிற்கு துக்கம் வருகிறது 1935ம் ஆண்டு முதல் நான் புரட்சித்தலைவருடன் பழகி வந்தேன் காலையில் சூரியன் உதிக்கும் முன்பே அவர் வீட்டிற்கு செல்வேன் இதைக் கண்ட அவரது தாய்ஏண்டா தினமும் இந்த நேரத்துக்கே வந்து விடுகிறாயே சாகும் போதும் ஒன்றாகத்தான் சாவீர்களோ என்றார் எனக்கு அந்த பாக்கியம் கிடைக்கவில்லை அவர் என்னை விட்டு விட்டு போய் விட்டார்(இவ்வாறு கூறுகையில் தங்கவேலு உணர்ச்சி மேலீட்டால் கண்ணீர் உகுத்தார்)

மேடையில் அவரிடம் நான் இரண்டு சிறப்புகளைக் கண்டேன் மேடையில் அவர் எவ்வளவு நேரம் அமர்ந்திருந்தாலும் கால் மேல் கால் போட்டு உட்கார மாட்டார் அவர் நம்மை கவனிக்க வில்லையே என்று யாரும்பேசிக்கொண்டிருந்தால் அதை அவர் கவனித்திருப்பது பின்பு தெரியும் அப்படிப்பட்ட கலைஞரை இழந்து கலை உலகம் தாயில்லா பிள்ளை போல் தவிக்கிறது,

கலைஉலகிற்கு நெருக்கடி ஏற்பட்ட போது ஒட்டு மொத்த வரிமூலம் காப்பாற்றினார். அவர் இறந்து விட்டார் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை இனி அவருக்கு மறுபிறவி கிடையாது அவரை இழந்துவாடும் அவரதுதுணைவியார்ஜானகி அம்மையாருக்கு என் ஆறுதலைதெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு கே.ஏ.தங்கவேலு பேசினார்.

## பாலசந்திரன்

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி கேரள திரைப்பட வர்த்தக சபை சார்பில்டி கே பாலச்சந்திரன் பேசியதாவது:-

அண்ணன்எம் ஜி ஆர் அமரரான செய்தி கேட்டவுடன் என் மகன் என் குடும்ப ஆல்பத்தை புரட்டிக்கொண்டிருந்தான். என்ன பார்க்கிறாய் என்று கேட்டபோது எம்.ஜி.ஆருடன் நீங்கள் இருக்கிற படத்தை எடுத்து பத்திரப்படுத்தப் போகிறேன் என்றான் ஏன் என்று நான் கேட்டபோது என் பிள்ளைகள் கேட்கும் போது எங்க அப்பாஎம்ஜிஆருடன் பழகியவர் என்று காண்பிக்கத்தான் என்றான் இதைக்கேட்டுநான் கண்கலங்கி விட்டேன் அண்ணன் எம்,ஜி.ஆர், அவர்கள் பல தலைமுறைக்கும் பெருமை தேடித்தந்தவர்.

இவ்வாறு பாலசந்திரன் பேசினார்,

## சிவகுமார்

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி நடிகர் சிவகுமார் பேசியதாவது:-

என்னுடைய வீட்டுக்கு பின்புதான் முதல்வரின் அலுவலகம் உள்ளது. அவர் முதல்வராவதற்கு முன்பே ஏழைகளுக்கு நூறு நூறு ரூபாயாக அள்ளி வழங்குவதை அன்றாட சம்பவமாக கொண்டிருந்தார். அரசியலில், கலை உலகில் வாரி வழங்குவதில் முதல்வராக விளங்கிய அந்த மாமேதை மறைந்துவிட்டார் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத அளவிற்கு புகழின் வானமாக விரிந்து உயர்ந்தவர் எம்.ஜி.ஆர். அவரது ஆன்மா சாந்தியடைய இறைவனைப் பிரார்த்திக்கிறேன்,

இவ்வாறு சிவகுமார் பேசினார்.

## சத்யராஜ்

உலகிற்கே தலைவராக விளங்கிய எம்ஜிஆர் மறைந்து விட்டார் அவர் மறைவால் நாங்கள் அனாதைகளாகி விட்டோம் மீண்டும் கூத்தாடிகளாகி விட்டோம் நினைத்து நினைத்து ஏங்குவதைதவிர என்ன செய்வது அவர் உடல் மறைந்தாலும் ஆன்மா எங்களுடன் இருக்கும் என்ற நம்பிக்கையுடன் வாழ்ந்து கொண்டிருப்போம்

இவ்வாறு சத்யராஜ் பேசினார்.

## இளையராஜா

ஆயிரம்தலைவர்கள்தோன்றுகிறார்கள் அவர்களில் மக்களை விரும்பும் தலைவர்கள் உண்டு ஆனால் மக்களால் நேசிக்கபபடும் தலைவர்கள் கிடைப்பதில்லை மக்கள் நேசித்த தலைவரை நாம் இழந்துவிட்டோம்எம்,ஜி.ஆர் இயற்கை நமக்கு தந்த கொடைவள்ளல் சமீபத்தில் நானும் எம்.எஸ்.வி. அவர்களும் கே.வி.அவர்களும் புரட்சித்தலைவரை சந்தித்தோம் இசையமைப்பாளர் கட்டிட நிதிக்காக நாங்கள் நடத்தும் நிகழ்ச்சி ஒன்றுக்கு நீங்கள்தலைமைதாங்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டோம்பார்ப்போம் என்றார்.

அப்போது நான் என்னுடைய பாடல் கேசட்டுகள் சிலவற்றைக் கொடுத்தேன் என்னை வெளிநாட்டினர். புகழ்ந்துகடிதம் எழுதி இருப்பதைப்பற்றியும் கூறினேன்.

அதைக் கேட்டு மகிழ்ந்து என் கையைப் பிடித்து முத்தமிட்டார் அது அவர் எனக்கு வழங்கிய ஆசி என்று நினைத்தேன் அவர் இறந்த அன்று நான் அடைந்த மனத் துயருக்கு அளவே இல்லை

அவர் ஆன்மா சாந்தி அடைய இறைவனைபிரார்த்திக்கிறேன்

இவ்வாறு இளையராஜா பேசினார்

## ஏ. எல். நாராயணன்

இதய தெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி வசனகர்த்தா ஏ எல் நாராயணன் பேசியதாவது:

தெய்வத்தின் வெளிப்பாடு சிலருக்குத்தான்கிடைக்கிறது அந்த சிலரில் ஒருவர்தான் எம்.ஜி.ஆர். பேதமின்றி யார் ஒருவர் இரக்கம் காட்டுகிறாரோ அவரே தெய்வம் என்று வள்ளலார் கூறியுள்ளார். அவர் இருந்திருந்தால் எம்.ஜி,ஆரை வணங்கியிருப்பார்,

இவ்வாறு ஏ, எல். நாராயணன் பேசினார்.

## வைரமுத்து

மறைந்த முதல்வருக்கு நாம் இங்கு அஞ்சலிசெலுத்துகிறோம் இதுவெறும் சம்பிரதாயம்தான் அவர் வாழ்க்கையிலிருந்து நிகழ்கால சமுதாயம் என்ன கற்றுக் கொள்கிறது என்பது அவருக்கு நாம் செலுத்தும் அஞ்சலியாக இருக்கும்

வாழ்வின் விதைப்பருவம் முதல் விருட்சம் வரை தன் உழைப்பால் முன்னுக்கு வந்தவர் அவர் நடித்த முதல் படம் 1937-ம் ஆண்டு வந்தது 11 ஆண்டு கழித்துதான் அவர் கதாநாயகனாக நடித்த படம் வந்தது. 1957 -ல் நாடோடி மன்னன் மூலம் சாதனைபுரிந்தார் 1967-ல் அவர் சார்ந்த கட்சி ஆட்சிக்கு வந்தது, 1977ல் அவரே ஆட்சிக்கு வந்தார் 87ல் அவர்மறைந்து விட்டார் அவர் வாழ்வு ஏறுமுகமாகத்தான் இருந்ததே யொழிய இறக்கம் என்பதே இல்லை.

மனிதர்களை நேசித்த மாமனிதர் அவர் 1962ம் ஆண்டு திருப்பரங்குன்றத்தில் தி.மு.க, மாநாடு நடந்தது லாரிகளிலும்,கட்டை வண்டிகளிலும் வந்தவர்கள் பந்தலிலேயே உறங்கினர் அவர்கள் ஒவ்வொருவர் தலைமாட்டிலும்மூன்று விதமான சோற்றுப்பொட்டலங்கள்இருந்தது எம் ஜி ஆர் கொடுத்ததாக அங்கிருந்தவர்கள் கூறினார்கள் அதிகாலை 6மணிக்கு உணவு கொடுத்தவர் எம் ஜி ஆராகத்தான் இருக்கமுடியும்

அவர்இறந்தபோது கவிஞர்களின் காதலன் கலமாகிவிட்டார் என்று நான் எழுதினேன் அவர் வாழ்க்கை எதிர்கால சந்ததிக்கு ஒரு பாடம். அதிலிருந்து நாம் கற்றுக் கொள்வது ஏராளம் உலகில் ஒரு சந்திரன், ஒரு சூரியன் தான் உண்டு. அதுபோல் ஒரு எம். ஜி. ஆர். தான் உண்டு.

இவ்வாறு வைரமுத்து பேசினார்.

## கமல்ஹாசன்

இதய வெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி நடிகர் கமல்ஹாசன் பேசுகையில் எம் ஜி ஆர் வாழ்க்கை பாடமாக அமைய வேண்டும் எனக்கு ஒருபாடமாக அமைந்துள்ளது என்று கூறினார்.

## ரஜினிகாந்த்

முதல்வர் இறந்த செய்தி கேட்டு அஞ்சலி செலுத்த நான் வீட்டுக்கு சென்றேன் அப்போது அங்கு பணியாற்றிய ஊழியர்கள் இருவர் பேசியதைக்கேட்டேன் கூட்டத்தினர் தன்னை அடித்து விட்டதாக ஒருவர்கூறினார் உடனே மற்றவர் கப்பலே மூழ்கி விட்டது. யார் அடித்தாலென்ன போனா லென்ன என்றார் இதைக் கேட்டு நான் அதிர்ந்துவிட்டேன். அந்த ஊழியர்கள் எவ்வளவு விசுவாசமாக இருந்தார்கள் என்பதை அறிந்தேன். அவர் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்கிறேம். என்பதே நமக்கு பெருமை என்று ரஜினிகாந்த் கூறினார்.

## ராஜேஷ்

20ந்தேதி நான்முதல்வரை சந்தித்தேன் வரலாற்றை படித்தவர்கள் உண்டு, வரலாற்றில் இடம் பெறுவோர் உண்டு, ஆனால் வரலாறாகவே மாறியவர் எம்.ஜி.ஆர் என்று ராஜேஷ் புகழஞ்சலி சூட்டினார்.

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தி தெலுங்கு நடிகர் கிருஷ்ணமராஜ், டைரக்டர் பி. மாதவன், ஏ. எல். எஸ். கண்ணப்பன், மோகன்காந்திராமன், ரங்கராஜன், பிரகாஷ்ராவ், சுதர்சன், நாகிரெட்டி உள்ளிட்டோரும் பேசினர்.

## இரங்கல் தீர்மானம்

இரங்கல் கூட்ட முடிவில் தென்இந்திய திரைப்பட வர்த்தகசபைத் தலைவர் ஜீ. வி. இரங்கல் தீர்மானத்தை முன்மொழிந்தார் வலம்புரி சோமநாதன் அதை வழி மொழிந்தார் இரங்கல் தீர்மானம் வருமாறு:-

பொன்மனச் செம்மல்!

கொடுத்து கொடுத்து சிவந்தகரம்!

சிரித்துச் சிரித்து சிவந்த முகம்!

வாடிய மக்களை வாழ வைத்த மக்கள் திலகம்!

பாமர மக்களை உயர்த்த படிப்பினைகள் சொன்ன புரட்சித் தலைவர்!

பசியினைப் போக்க பகல் உணவு தந்த அன்னமிட்ட வள்ளல்!

கோடான கோடி இதயங்களில் வாழும் முப்பிறவி கண்ட அன்பு அண்ணன்!

கலை உலகின் தலைமகன் டாக்டர் எம் ஜி ஆர் அவர்களை இழந்து தவிக்கும்திரை உலகின் அனைத்து பிரிவினைச் சார்ந்த நாங்கள் கண்ணீரால் அஞ்சலி செலுத்துகிறோம்.

அவர் ஆன்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறோம்.

அவரை இழந்து மீளாத் துயரத்தில் ஆழ்ந்துள்ளஅவர் குடும்பத்தினருக்கு எங்கள் ஆழ்ந்த அனுதாபத்தினை தெரிவித்துக் கொள்கிறோம்-

இவ்வாறு இரங்கல் தீர்மானம் நிறைவேறியது.

## ஊர்வலம்

இரங்கல் கூட்டத்துக்கு பின் சிவாஜிகணேசன் தலைமையில்மவுன ஊர்வலம் புறப்பட்டது. ராஜாஜி மண்டப பிரதான வாசல் வழியாக அண்ணாசாலை, வாலாஜாசாலை காமராசர் சாலை வழியாக இதய தெய்வம் துயிலுமிடத்திற்கு திரை உலகினர் நடந்து வந்தனர்,

## சிவாஜி கண்ணீர்

இதயதெய்வம் துயிலுமிடத்தில் திரை உலகின் சார்பில் சிவாஜிகணேசன் மலர்வளையம் வைத்தார். அப்போது சோகம் தாங்காது குமுறி அழுதார்.

இதயதெய்வத்துக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் நடந்த மவுன ஊர்வலத்தில் நடிகர்கள் விஜயகாந்த்,பிரபு, கார்த்திக்,ராஜீவ், பாண்டியன்சரத்பாபுராமராஜன்,மதுமோகன்விசுடெல்லிகணேஷ், சிவக்குமார்,இடிச்சபுளி செல்வராஜ்,பிரேம்நசீர் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

நடிகைகள் ஸ்ரீதேவி, ராதிகா, சுஹாசினி, ரேகா, அமலா, ஜெயசித்ரா, ஸ்ரீவித்யா, வடிவுக்கரசி, அனுராதா, லலிதகுமாரி, டிஸ்கோ சாந்தி, காந்திமதி, கோகிலா, ரமாபிரபா, எம், சரோஜா, ரமணி, சத்யா, மாயா, பேபி ஷாலினி,ஆகியோரும் ஊர்வலத்தில் பங்கேற்றனர்.

இயக்குனர்கள் எஸ் பி முத்துராமன், ஏ ஜெகநாதன் ஆர் சி சக்தி, பாஸ்கர், பாலு ஆனந்த், அமீர்ஜான், கொட்டாரக்காரா, எஸ் ஏ சந்திரசேகரன், சத்யா மூவீஸ் தியாகராஜன் சந்தானபாரதி படஅதிபர்கள் கே ஆர் ஜி ஏ வி எம் சரவணன்அவினாசி மணி மதிஒளி சண்முகம் பத்திரிகையாளர் தமிழ்மணி மற்றும் ஏ நெய்னார் மற்றும் பி.எஸ். வீரப்பா, டி. ராமா நாயுடு உள்ளிட்டோரும் பங்கேற்றனர்.

இசையமைப்பாளர்கள் கங்கை அமரன், சந்திரபோஸ், எஸ்.ஏ ராஜ்குமார், பின்னணிப்பாடகர்மலேசியா வாசுதேவன் உள்ளிட்ட பலரும் பங்கேற்றனர்-

## ராமதாஸ் மிஷின் அஞ்சலி

சென்னை, ஜன. 3

ராமதாஸ்மிஷின் நடத்தும் புண்ணிய பூமி தமிழ் மாநிலப் பிரிவு சென்னையில் சுவாமி பகவத்தாஸ் தலைமையில் கூடி அமரர் புரட்சித் தலைவர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தது.

இதில் டி. ஜி. மணி, குமரன், சி. வரதராஜன் முரளி, தயானந்தன், சத்திய நாராயணன், கே.பி. கோபால கிருஷ்ணன் மற்றும் ராமதாஸ் மிஷின் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.